# பாகம் – 4

# ருத்ராட்சம் முகங்களும் அதன் பலன்களும்

சிவாலய வழிபாட்டின் போது ருத்ராட்சம் மணிகளை அணிந்து வரும் அடியவர்கள், சிறப்பாகச் சிவதரிசனம் செய்ய நந்தியும் சண்டிகேஷ்வரரும் உதவி புரிகிறார்கள்.

அனைத்துக்கும் மேலாக ருத்ராட்சம் தரித்தவர் சிவபக்தர் என்ற பெருமிதக் களிப்பை உள்ளம் அடைகிறது.




மந்திர ஒலிகளை ஈர்க்கும் சக்தியை ருத்ராட்சம் மணிகள் இயல்பாகக் கொண்டிருக்கின்றன. எனவே மந்திரங்களை உச்சரிக்கும் போதும், பக்திப் பாடல்களைப் பாராயணம் செய்யும் போதும், அவற்றின் முழுப்பலன்களை உடலும், உள்ளமும் உயிரும் பெறுவதற்கு ருத்ராட்சம்த்தின் துணை அவசியம் தேவைப்படுகிறது.

ஆயிரம் ருத்ராட்சம் மணிகளை அணிந்து வருபவரைப் பார்த்து இவர் சிவனே என்று தேவர்கள் பணிகிறார்கள் என்று இவற்றின் மேன்மையைப் பிரமோத்தர காண்டாம் என்றும் நூல் கூறுகிறது.

சாமியார்களைப் பற்றி ஒரு அடையாளம் காட்டும் போது "நெற்றியில் பட்டை", "காவிச் சட்டை", "கழுத்தில் கொட்டை" என்று வேடிக்கையாகவும், சில சமயங்களில் வினையாகவும் சொல்வதுண்டு.

இது அணிவோருக்கு மன அமைதியையும், மன ஊக்கத்தையும், புத்திக் கூர்மையும் அளிக்கிறது. 38 வகையான உருத்திராக்கத்தில், 21 வகை மிக பிரசித்தம். முகத்தைப் பொறுத்தே ஒரு முகம், இரு முகம் என்று வரிசைப் படுத்தப்படுகிறது. ஒவ்வொரு முகத்திற்கும் ஒவ்வொரு பலன் உண்டு.




# ஒரு முகம் :

ஏக முக ருத்ராட்சம்த்தின் அதி தேவதையாக தத் பரமசிவனைக் கூறுவார்கள். இந்த ஏக முக ருத்ராட்சம்த்தை அணிவதால் சிவபெருமான் ப்ரீத்தி அடைந்து பிரம்மஹத்தி தோஷம் விலகும்.

# மந்திரம் - ஓம் நமச்சிவாய, ஓம் ஹரீம் நமஹ

ஒரு முகமுடைய உருத்திராக்கம் சூரியனால் ஆளப்படுகிறது. இந்த உருத்திராக்கம் ஏனைய எல்லா முகங்களையுடைய உருத்திராக்கங்களுக்கும் அரசனாகையால்,இது தூய உணர்வைக் (Pure consciousness) குறிக்கிறது. அணிபவருக்குப் போகமும் மோட்சமும் கிட்டும். இவர் ராஜா ஜனகர் போன்று வாழ்வர். இவர் வேண்டும் போது எல்லா சுகங்களையும் அனுபவிப்பர். எனினும் பற்றற்றவராய் இருப்பர்.

ஒரு முகத்து உருத்திராக்கம், நோய்களைச் சரியாகக் கண்டறிவதற்கும், அறுவை சிகிச்சையில் வெற்றி பெறுவதற்கும் உதவுவதால் மருத்துவர்களுக்கு இது மிகவும்உகந்ததாகும்.

ஏக முக என அழைக்கப்படும் ஒருமுக ருத்ராட்சம் சன்யாசிகள் மட்டுமே அணியவேண்டும். பிறர் வீட்டில் உள்ள சாலிக்ராமம் மற்றும் விக்ரஹம் போல வைத்து பூஜை செய்யலாம்.

# இரண்டு முகம் :

# மந்திரம் - ஸ்ரீ கௌரி சங்கராய நமஹ, ஓம் நமஹ

இரு முகமுடைய உருத்திராக்கத்தை ஆளும் கோள் சந்திரன். இது பகவான் சிவனும், தேவிபார்வதியும் (சக்தி) இணைந்த உருவமான அர்த்த நாரீஸ்வரரைக் குறிக்கிறது.

(மாதொரு பாகன்) இந்த ருத்ராட்சம்த்தை அணிவோருக்கு 'ஒற்றுமை' (unity) உணர்வை அளிக்கும். இந்த ஒற்றுமை குரு-சிஷ்யன், பெற்றோர்-குழந்தைகள், கணவன்-மனைவி, நண்பர்களிடையே உள்ள தொடர்பைக் குறிக்கலாம். ஒருமைத் தன்மையை நிலை பெறச் செய்வது இதன் தனித்தன்மையாகும்.

இரண்டு முக ருத்ராட்சம்த்தை அணிவதால் சிவசக்தி ப்ரீதி ஏற்பட்டு பசுவைக் கொன்ற தோஷம் விலகும்.

# மூன்று முகம் :

# மந்திரம் - ஓம் கிளீம் நமஹ

இந்த மும்முகமுள்ள உருத்திராக்கதை ஆளும் கோள் செவ்வாய்.இது தீக்கடவுளை குறிக்கிறது. எல்லாப் பொருட்களையும் உண்ட பின்னரும் தீ தூய்மையாக இருப்பது போல் மூன்று முகமுள்ள உருத்திராக்கத்தை அணியவரும் அருள் கிட்டிய போது, தனதுவாழ்க்கையில் பாவங்களில், தவறுகளிலிருந்து விடுபட்டுத் தூய நிலையை அடைகின்றார்.

இந்த மூன்று முக உருத்திரக்கம் தாழ்வு மனப்பான்மை (Inferiority Complex) உள்ளார்ந்த பயம் (Subjective fear) குற்ற உணர்வு (Guilt) மனச்சோர்வு போன்றவற்றால் துன்பப்படுபவர்களுக்கும் உகந்ததாகும். இதை அணிவதால் மும்மூர்த்திகளும் சந்தோஷம் அடைகிறார்கள். ஸ்திரீகளுக்குச் செய்த தோஷம் விலகும்.

## நான்கு முகம் :

## மந்திரம - ஓம் ஹரீம் நமஹ

இந்த நான்கு முகமுள்ள உருத்திராக்கத்தை ஆளும் கோள் புதன். இது பிரம்மனைக் குறிக்கிறது. இதை அணிவதால் பிரம்மா ப்ரீதி அடைவதுடன், மனிதர்களுக்கு இழைத்த பாவம் விலகும்.அணிவோருக்கு அருள் கிடைத்த போது ஆக்க சக்தி கிட்டுகிறது. மாணவர்கள், அறிவியலாளர்கள், எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள் ஆகியோருக்கு நற்பயன் அளிக்க வல்லது. ஞாபகசக்தி, கூர்ந்த மதி புத்தி சாதுர்யம் ஆகியவற்றைமேம்படுத்துகிறது. நான்முக உருத்திராக்கங்கள் மூன்றினை வலது கையில் கட்டினால் அவர் முன் யாரும் எதிர்த்து நிற்க முடியாது.

நான்கு முக ருத்ராக்ஷத்தை பயன்படுத்தினால் கலை நயம், சங்கீத ஞானம் போன்ற கலையாற்றல் வளரும். குழந்தை பிறப்பு இல்லாமல் சிரமப்படுபவர்களுக்கு நான்கு முக ருத்ராக்ஷத்தை பயன்படுத்துவதால் தடை நீங்க வாய்ப்பு உண்டு.

## ஐந்து முகம் :

## மந்திரம - ஓம் ஹரீம் நமஹ

ஐந்து முகங்களுடைய உருத்திராக்கத்தின் ஆளும் கோள் வியாழன். இது மங்களகரத்தின் குறியீடான சிவனை குறிக்கும். இதை அணிவதால் சதாசிவம் சந்தோஷம் அடைகிறார். செய்யக்கூடாத செயல் களைச் செய்வதால் உண்டாகும் தோஷம் விலகும். ஐந்து முக ருத்ராக்ஷத்தை குடும்ப வாழ்க்கையில் உள்ளவர்கள் பயன்படுத்தலாம்.

இந்த ஐந்து முகமுடைய உருத்திராக்க மாலை அணிதோருக்கு உடல் நலம், அமைதி ஆகியன கிட்டும். இது ஒருவரின் இரத்த அழுத்தம், இதய நோய்கள் ஆகியவற்றைக் கண்காணிக்கிறது. இந்த உருத்திராக்க மாலையை ஜபம் செய்வதற்கும் பயன்படுத்துவர். இந்த மாலையை அணிவோருடைய மனம் அமைதியாக இருக்கும். அத்துடன் இதை அணிபவர்களுக்கு அகால மரணம் ஏற்படாது என்பதில் சந்தேகம் ஏதுவுமில்லை.

## ஆறு முகம் :

## மந்திரம் -ஸ்வாமி கார்த்திகேயாய நமஹ

இந்த ஆறு முக உருத்திராக்கத்தை ஆளும் கோள் வெள்ளி. இந்த உருத்திராக்கம் சிவனின்இரண்டாவது மகனான கார்த்திகேயக் கடவுளைக் குறிக்கும். இதை அணிவதால் ஆறுமுகன் சந்தோஷம் அடைவதுடன், பிரம்மஹத்தி தோஷம் விலகும்.

இதை அணிந்து வேண்டியோருக்கு அறிவு, மேம்படுத்தப்பட்ட புத்தி, மனத்திட்பம், திடமான மனம் ஆகியவை அருளப்படும். இந்த ஆறு முக உருத்திராக்கம், மேலாளர்கள், வணிகர்கள், நிர்வாகிகள், பத்திரிகையாளர்கள், ஆகியோருக்கு உகந்தது. இது ஒருவரின் பிறப்புறுப்புகளை ஆள்கிறது. துடிப்பு இல்லாமல் சோர்வுடன் இருக்கும் பன்னிரெண்டு வயதுக்கு உட்பட்ட குழந்தைகளுக்கு ஆறுமுக (ஷண்முகி) ருத்ராட்சம் நல்ல பலனை அளிக்கும்.

## ஏழு முகம் :

## மந்திரம் - ஓம் மஹா லட்சிம்யை நமஹ ஓஅம் ஹீம் நமக

இந்த ஏழு முக உருத்திராக்கத்தை ஆளும் கோள் சனி. இது தேவி திருமகளைக் குறிக்கும். இதை அணிவதால் சப்தமாதர்கள் சந்தோஷம் அடைவதுடன் களவு தோஷமும் கோபத் தீயும் விலகும்.இதை அணிவோருக்கு

நல்ல உடல் நலம் அருள் பாலிக்கப்படும். உடல் தொடர்பான துன்பங்கள், நிதித் தொல்லைகள், மனத் துன்பங்கள் ஆகியவற்றால் வருத்த முற்றிருப்போர் இந்த உருத்திராக்கத்தை அணிதல் வேண்டும்.

இந்த ஏழு முக உருத்திராக்கத்தை ஒருவர் அணிவதால் அவருக்கு வணிகம், பணி ஆகியவற்றில் முன்னேற்றம் ஏற்படுத்துவதுடன் அவர் மகிழ்வாகக் கழிக்க முடிகிறது.

## எட்டு முகம் :

## மந்திரம் - ஓம் ஹீம் நமஹ, ஓம் கணேஷாய நமஹ

இந்த எட்டு முகமுடைய உருத்திராக்கத்தின் ஆளும் கோள் இராகு. இது பகவான் கணேசரைக்குறிக்கிறது. இதை அணிவதால் அட்டவித்யேச்வரர் சந்தோஷம் அடைவதுடன், செய்யக்கூடாத பாவங்களைச் செய்த தோஷம் விலகுகிறது.

இது முயற்சிகளிலும் தடைகளை நீக்கி வெற்றியைத் தருகிறது. அணிவோருக்கு ரித்திகள் (Riddhis), சித்திகள் (Siddhies) ஆகிய எல்லாப் பேறுகளையும் அளிக்கும். இதை அணிவோரின் எதிரிகள் அழிந்து போவார்கள். அதாவது இவர்கள் எதிரிகளின் மனத்தையும், நோக்கங்களையும் இந்த உருத்திராக்கம் மாற்றிவிடும்.

## ஒன்பது முகம் :

## மந்திரம் - நவ துர்க்காயை நமஹ, ஓம் ஹரீம் ஹூம் நமஹ

இந்த ஒன்பது முக உருத்திராக்கத்தை ஆளும் கோள் கேது. இது தேவி துர்க்கையைக் (சக்தி) குறிக்கிறது. அதிதேவதை பைரவர் இதை அணிவதால் நவதீர்த்தங் களில் குளித்தால் என்ன புண்ணியமோ அந்தப் புண்ணியம் கிட்டும்; பைசாச உபாதைகளும் துஷ்டப் பிரயோகங்களும் விலகும் இதை அணிந்து வணங்குபவர்களுக்கு அன்னைக் கடவுள் வெற்றிகரமான வாழ்க்கையை வாழ்வதற்கு அதிக சக்தி, ஆற்றல், செயல் திறம், அச்சமின்மை ஆகியவற்றை அளிப்பாள்.

## பத்து முகம் :

## மந்திரம் - ஸ்ரீ நாராணாய நமஹ, ஸ்ரீ வைஷ்ணவை நமஹ, ஓம் ஹ்ரீம் நமஹ

இந்த பத்து முகமுள்ள உருத்திராக்கத்திற்கு ஆளும் கோள் என்று ஒன்றுமில்லை. பத்து முக ருத்ராட்சம்த் தின் அதிதேவதை விஷ்ணு. இதை அணிவதால் அஷ்டதிக் பாலகர்களும் சந்தோஷம் அடைவதாகச் சொல்லப்பட்டுள்ளது. ஜோதிடத் தில் வரும் நாக தோஷமும்; பூத- பிரேத- பைசாச தோஷங் களும் விலகும்.

கோள்களினால் ஏற்படும் தீய பலன்களையும் இது சாந்தப்படுத்தும். பத்துத் திசைகளினதும், பத்து அவதாரங்களிலும் செல்வாக்கு இந்தப் பத்துமுக உருத்திராக்கத்தில் உண்டு. ஒருவரின் உடலுக்கு இது கேடயம் போல் செயல்பட்டு, எல்லாத் தீய சக்திகளையும் விரட்டுகிறது. இதை அணிந்து வணங்குவோர்களுடைய குடும்பம் பரம்பரை பரம்பரையாகச் செழிப்புற்று வாழும்.

## பதினோரு முகம் :

## மந்திரம் - ஓம் ஸ்ரீ ருத்திர நமஹ, ஓம் ஹரீம் நும் நமஹ

இது பகவான் அனுமானைக் குறிக்கும். இது வணங்கி வேண்டியோருக்கு அறிவு, நேர்மையான நீதி ஆற்றல் மிக்க சொல்லாட்சி, துணிவுள்ள வாழ்க்கை, வெற்றி ஆகியனவற்றை அருளும். எல்லாவற்றிற்கும் மேலாக, விபத்தினால் மரணம் ஏற்படுவதை இது தடுக்கும். இதை அணிவோர் அச்சமற்றவராக ஆவார். தியானத்திற்கும் இது உதவும்.

பதினோரு முக ருத்திராட் சத்தின் அதிதேவதை பதினோரு ருத்ரர்களாகச் சொல்லப்பட்டுள் ளது. இதை அணிவதால் 11 ருத்திரர்களும் ப்ரீதி அடைகிறார்கள். பல அஸ்வமேத யாகம் செய்த பலன் களும் பல வாஜபேய யாகம் செய்த பலனும் கிட்டும்.

## பன்னிரண்டு முகம் :

# மந்திரம் - சூர்யாய நமஹ ஓம் க்ரோன் க்ஷோண் ரவுண் நமஹ

இது சூரியக் கடவுளைக் குறிக்கும். இதை அணிவோர் அளவற்ற நிர்வாகத் திறனைப் பெறுவர். அத்துடன் சூரியனின் குணங்களையும் பெறுவர். இக்குணங்களால் ஒருவர் என்றும் பிரகாசிக்கும் ஒளியுடனும், பலத்துடன், பிறரை ஆட்சி செய்து வருவர்.

இந்தப் பன்னிரண்டு முக உருத்திராக்கம் மந்திரிகள், அரசியல்வாதிகள், ஆட்சியாளர்கள், வணிகர்கள், நிர்வாகிகள் போன்றோருக்கு உகந்தது. இது வியக்கத்தக்க வகையில் பயனளிக்க வல்லது.

## பதின்மூன்று முகம் :

## மந்திரம் - ஓம் ஹரீம் நமஹ

இது இந்திரனைக் குறிக்கும். தொழுது வேண்டியவர்களுக்கு மனிதன் விரும்பத்தக்க எல்லா சுகங்களையும் இது அளிக்கும். செல்வம், மாட்சிமை ஆகியவற்றை அளிப்பதுடன் உலகத்து ஆசைகள் அனைத்தும் இது நிறைவேற்றும்.

அத்துடன் அஷ்டமா சித்திகளையும் இது அளிக்க வல்லது. இதை அணிவோரை காமக்கடவுள் விரும்புவர். மகிழ்ச்சி அடைந்த காமக்கடவுள், அணிவோருக்கு உலகத்து ஆசைகள் எல்லாவற்றையும் நிறைவேற்றுவார்.

## பதினான்கு முகம் :

## மந்திரம் - ஓம் நமஹ சிவாய

இந்தப் பதினான்கு முகமுடைய உருத்திராக்கமே அதி உயர்ந்த விலை மதிப்பற்ற தெய்வீக மணியாகும். அதுவே தேவ மணியுமாகும். இந்த உருத்திராக்கம் அணிவோருடைய ஆறாவது புலனை விழிக்கச் செய்கிறது. அதனால் அவர் எதிர்கால நிகழ்வுகளை முன் கூட்டியேஅறிகின்றார்.

இதை அணிவோர் தாம் எடுத்த முடிவுகளில் ஒரு போதும் தோல்வியடைவதில்லை. இதை அணிவோர் இடர்கள், துன்பங்கள், கவலைகள் எல்லாவற்றையும் கடந்து விட முடிகிறது.மேலும், அணிவோருக்குப் பாதுகாப்பையும்எல்லாச் செல்வங்களையும் இது கொடுக்கிறது.

## பதினைந்து முதல் இருபத்தொன்று வரை உள்ள முகங்கள் :

பண்டையக் கால முனிவர்கள் இந்த உருத்திராக்க மணிகளை பூஜை மேடையில் வைக்கும்படியும் அதன் வழி முழுக் குடும்பத்திற்கும் செழிப்பைக் கொடுக்கின்றன. பகவான் உருத்திரனின் அருளைப் பெறும்படியும் அறிவுரை கூறியுள்ளனர்.

இப்படி ஒவ்வொரு முகத்திற்கும் ஒவ்வொரு பலன் உண்டு. இவற்றை நன்கு பாதுகாத்து வைத்துக் கொண்டால் தலைமுறை தலைமுறையாகக் கூட வைத்துக் கொள்ளலாம்.

## கௌரி சங்கர் :

## மந்திரம் - ஓம் கௌரி சங்கராய நமஹ

இயல்பாகவே ஒன்றாக இணைந்த இரு உருத்திராக்கங்கள் கௌரி சங்கர் என அழைக்கப் படுகின்றன. இது சிவனும் பார்வதியும் சேர்ந்த உருவானதாகக் கொள்ளப் படுகின்றது. இது கணவனும் மனைவியும் ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ள உதவுகிறது. எனவே இந்த உருத்திராக்கம் குடும்பத்தில் அமைதியும் சுகமும் விளங்க வைக்கும் சிறந்த பொருளாக கருதப்படுகிறது. கௌரி சங்கர் உருத்திராக்கத்தை ஒருவர் வழிப்படும் இடத்தில் வைத்துத் தொழுது வந்தால் அவருக்கு ஏற்படும் துன்பம், வேதனை, உலகியல் தடைகள் எல்லாம் அழிகின்றன.

குடும்பத்தில் அமைதியும் மகிழ்ச்சியும் மேலோங்குகின்றன. உருத்திராக்கத்தை 3, 4, 5, 6, எண்ணிகையில் வளையமாகக் கோர்த்து அணிவர். கழுத்தில் அணியும் மாலைகள் 27, 54, 108 என்ற கணக்கில் இருக்கும். கழுத்தில், கையில் அணியும் உருத்திராக்கம் அங்குபங்சர் போல் செயல்பட்டு பயன் அளிக்கும்.

## மணி அளவு

பெரும்பாலும் இப்போது பலரும் மிகச் சிறிய அளவுடைய மணிகளையே விரும்பிப் பூணுகிறார்கள். எனினும் உருத்திராக்க விசிட்டம் என்னும் நூலில் எந்த அளவு உருத்திராக்க மணி சிறப்புடையது என்று கூறப் பெற்றுள்ளது.

1.நெல்லிக்கனி அளவுள்ள மணி உத்தமமானது ;

2.இலந்தைக் கனிஅளவுள்ளது மத்திமம் ;

3.கடலை அளவுடையது அதமம்.

இதனைப் பின்வரும் வெண்பா ;

"உத்தமமே மலகத் தின்கனிக்கொப் பானகண்டி ;

மத்திம மாகும் இலந்தை வன்கனிக்கொப்பு

இத்தலத்துள் நீசஞ் சணவித் திணை யென்ன வேறினைக ;

பாசவிதம் பாற்ற நினைப் பார். "

"திருச்சிற்றம்பலம்"

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.




# ஆன்மீகம்